இன்றைய உலக நிலைமையைப் பரிசீலனை செய்த தா இரண்டாவது உலக யுத்தத்திற்கு முன்
முதலாளித்துவத்திற்கு உலகமெங்கும் ஒரேமாதிரியான மார்க்கெட் இருந்தது என்றும், இன்று
அந்த நிலைமை மாறி உலகில் ஒன்றுக்கொன்று நேர் எதிரான போட்டியிடும் இரண்டு
விதமான உலகமார்க்கெட்டுகள் தோன்றிவிட்டன என்றும் கூறுகிறார். தத்துவரீதி
யாகவும், நடைமுறையிலும் மிகமிக முக்கியத்துவம் வாய்ந்த கருத்தோட்டம் இது. "இர
ண்டாவது உலகயுத்தத்தின் காரணமாகவும், அவ் வியாபகத்தினால் ஒரேமாதிரியான உலக
மார்க்கெட் உடைந்துவிட்டது. உலக முதலாளித்துவ அமைப்பின் பொதுவான நெருக்
கடியை இது மேலும் தீவிரமாக்கும் நிலைமை உண்டாக்கியிருக்கிறது." என்று ஸ்டாலி
ன் சோஷலிஸப் பொருளாதாரப் பிரச்சினைகள் என்ற நூலில் தா எழுதியிருக்கிறார் # முதலாளித்
துவத்தின் பொதுவான நெருக்கடியின் காரணமாகவேதான் இரண்டாவது உலகயுத்தமே
ஏற்பட்டது. ஒன்றை ஒன்று எதிர்த்துச் சண்டையிட்ட முதலாளித்துவ கோஷ்டிகள் உல
கைப் புதிதாகப் பங்கு போட்டுக் கொள்வதற்காகவே ஆயுதமேந்தினர். புதிதான செல்
வாக்குகள் உள்ள இடங்களைப் பறித்துக் கொள்வதற்காகவும், தங்களது சாமான்களை
விற்பனை செய்ய புதிதாக மார்க்கெட்டுகளைப் பறிப்பதற்காகவும் போர்புரிந்தனர். அந்த யுத்
தத்தில் கலந்துக் கொண்ட ஒவ்வொரு முதலாளித்துவ தேசமும், தனது எதிரியை மடக்கி
பொருளாதாரத் துறையில் தன்னுடைய நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொண்டு உலக ஆதிக்க
த்திற்கு வழிதேடலாம் எனக் கனவு கண்டது. ஆனால் யுத்தத்தின் முடிவு அவர்களது கனவுக்
கோட்டைகள் தகர்ந்து போகும்படி செய்தது # அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய தே
சங்களுக்கு போட்டியான ஜெர்மனியும், ஜப்பானும், தோற்கடிக்கப்பட்ட போதிலும் முதலாளி
த்துவத்தின் பொதுவான நெருக்கடி குறைவதற்குப் பதிலாக மேலும் தீவிரமடைந்தது. மேலும்,
ஐரோப்பிய மக்கள் ஜனநாயக நாடுகளும் முதலாளித்துவ அமைப்பிலிருந்து பிரிந்து சென்
றன. அவைகள் சோவியத் யூனியனுடன் சேர்ந்து ஒன்று, ஏகாதிபத்திய முகாமை எதிர்க்கும்
சமாதானத்தையும் ஜனநாயகத்தையும் பலமும் சக்தி வாய்ந்த முகாமாக திகழ்கிறது #
ஒன்றையொன்று எதிர்த்து நிற்கும் இருமுகாம்கள் தோன்றியதின் பொருளாதார விளை
வென்ன? அவ் வியாபகத்தினால் ஒரேமாதிரியான உலகமார்க்கெட்டை உடைத்து ஒன்றுக்
கொன்று நேர் எதிரான இரண்டு மார்க்கெட்டுகள் உண்டாகியதுதான். ஒன்று ஜனநா
யக சமாதான முகாமைச் சேர்ந்தது. மற்றது ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பு தேசங்களைக்
கொண்டது. அடிப்படையாக ஏற்பட்ட இம்மாறுதலால் விளைவை இன்று ஒவ்வொரு
பொருளாதாரத்திலும் சம்பவத்திலும் பார்க்கலாம். இந்த இரண்டுவித மார்க்கெட்டுகளின் தன்
மையைப் பார்க்கத் தவறுவது, சர்வதேசங்கள், பொதுமக்கள் ஆகியோரிடையே இவ்
வித மாறுபட்ட நிலைமை புகுத்தியுள்ள மாற்றத்தைப் பார்க்கத் தவறுவது இன்றைய சர்வ
தேசிய நிலைமையிலுள்ள முக்கியமான போக்குகளை உணர்ந்து கொள்ள உதவாதாக்
கிறது. இந்த இருவித உலக மார்க்கெட்டுகளிடையே நடக்கும் சம்பவங்களை நாம் கருத்தூன்றி
க் கவனிப்பது அவசியம். ** இ. இரண்டு உலக மார்க்கெட்:- புதிதாகத் தோன்றியுள்ள
இந்த உலக மார்க்கெட் தற்காலிகமானதல்ல. இந்தப் புதிய ஜனநாயக உலக மார்க்கெட்
டில் சேர்ந்துள்ள தேசங்களிடையே இதுவரை காணாத புதுவித உறவுகள் ஏற்பட்டி
ருக்கின்றன. உலகின் பரப்பளவில் நான்கில் ஒரு பகுதியைக் கொண்டவை இந்த தேசங்
கள். இவ்வுலகின் பாகம் ஜனத்தொகையில் மூன்றில் ஒருபகுதியைக் கொண்டவை. சமத்
துவம், பொருளாதார ஒத்துழைப்பு, சிறிய பெரிய தேசங்களின் தேசிய சுதந்திரத்தை
அங்கீகரிப்பது என்ற அடிப்படையில்தான் இந்த தேசங்களிடையே உறவுகள் உள்ளன.
சோ. யூனியனின் பலமும், புதிய ஜனநாயக நாடுகளின் பலமும் ஒரேமாதிரியாக இருப்ப
தால்தான் இவ்வித ஒத்துழைப்பு சாத்தியமாகிறது. வெறும் ஜனங்களின் நன்மைக்காக உற்
பத்தி சக்திகளை பெருக்குவதே, சுயநல லாபத்திற்காக அல்ல, அத் தேசங்களின் கண்ணோட்
டமாக இருப்பதால்தான் ஒத்துழைப்பு சாத்தியமாகிறது. பரஸ்பர சினேகித மனப்பான்
மையுடன் ஒருவர் மற்றவரின் தேசிய சுதந்திரத்தை மதிப்பது, பரஸ்பர லாபகரமான முறை
யில் உதவி செய்து கொள்வது — என்ற அடிப்படையில் தொடர்பு கொண்டுள்ளதால் மேலும்
ஒவ்வொரு தேசத்தின் பலமும் பாதுகாக்கப்படுகிறது. சோ. யூனியன் வெகுவேகமாக மே
ல் நோக்கத்திற்காகப் போராடி வருகிறது.